மலர் 15 இதழ் 166

NAVAMANI (Tamil Daily) MADRAS

Regd. M No. 7897

நாகை தருமன்
16/1, பிட்டர்ஸ் ரோடு காலனி
சென்னை-600 014
Phone No. 76190, 76191

4 பக்கம் 25 காசு



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 28-2-75 வெள்ளி

வெளியூர் 1-3-75 சனி



## தேர்தல் குறித்து

## மந்திரி, அ. தி. மு. க. சவால்கள்

# சட்டசபையில் கடும்மோதல்

**சென்னை, பிப். 28—தேர்தல் குறித்து அமைச்சர் மன்னை நாராயணசாமியும், அ. தி. மு. க. உறுப்பினர்களும் இன்று சட்டசபையில் பரஸ்பரம் சவால்விட்டுக்கொண்டனர். இதனுல் சபையில் பரபரப்பு ஏற்பட்டது.**

மேட்டூர் டவுன்ஷிப்பை நகர சபையாக மாற்றவேண்டும் என்ற தனியார் மசோதா இன்று சட்டசபையில் குரல் ஓட்டின் மூலம் தோற்கடிக்கப்பட்டது.

இந்தமசோதாவை சுரேந்திரன் (புது. காங்கிரஸ்) கொண்டு வந்தார்.

இன்று சட்டசபையில் தனியார் மசோதாமீது விவாதம் நடந்தபோது சபையில்பலத்த வாக்குவாதங்கள் நடைபெற்றன.

பழைய காங்கிரஸ், புது காங்கிரஸ், கமயூனிஸ்ட்கட்சி, தி. மு. க. முஸ்லிம்லீக் ஆகிய கட்சி இந்த வாக்குவாதத் கலந்துகொண்டார்கள்

விவாதத்திற்கு பதிலளித்து பேசிக்கொண்டிருந்த அமைச்சர் மன்னை நாராயணசாமி தேர்தல் நடத்துவதற்கு நாங்கள் பயப்படவில்லை என்றுர்.

அவர் பயந்தவரா, நாங்கள் பயந்தவர்களா என்பது நாட்டு மக்களுக்குத்தெரியும்.

சீனிவாசன் (அ. தி. மு. க.): நாங்கள் பயந்து ஓடிவிட்டதாக அமைச்சர் சொல்கிருர். நாங்கள்யாருக்கும் பயப்படுகிறவர்கள் அல்ல. 67லும் 71லும் எப்படிப்பட்டவரை எதிர்த்து நின்றேன் என்பதை எல்லாரும் அறிவார்கள்.

மன்னை நாராயணசாமி: சீனிவாசன் விஷயங்களை குத்தூசி போட்டு எடுக்கிருர்.

ஆறுமுகம் (தி. மு. க.): இந்தப் பக்கத்தில் எந்த நெருக்கடியும் இல்லை.

மன்னை நாராயணசாமி:— சீனிவாசனைப் போல ஜெயிக்கிற கட்சிக்குப் போகிற ஆட்கள் நாங்கள் அல்ல. வாழ்வு, சாவு இரண்டிலும் ஒரே இடத்தில் இருப்போம்.

சீனிவாசன (அ.தி.மு.க.):- எந்தத் தொகுதியில் நிற்க வேண்டுமென்று சொல்லுங்கள்? யாரை எதிர்த்து நிற்க வேண்டும் என்று சொல்லுங்கள் நிற்கத் தயார்.

மன்னை:— எந்தத் தொகுதி என்பதை நீங்கள் தான் தேர்ந்து எடுக்கவேண்டும். எந்தத் தொகுதிஎன்பதை உங்கள் தலைவரைக் கேளுங்கள்.

சுரேந்திரன் (பு. காங்.):— காங்கிரஸ் அரசாங்கம் மேட்டூர் டவுன்ஷிப்பை மாற்றவில்லை ஆகவே, நாங்களும் மாற்றவில்லை என்று சொல்லுகிறீர்கள், உங்களுக்கும், பழைய காங்கிரசுக்கும் ரகசிய உடன்பாடு இருக்கிறதா?

பொன்னப்ப நாடார்: நான் பகிரங்கமாகச் சொல்கிறேன். நீங்கள் யாரோடு உறவு வைத்துக்கொண்டிருக்கிறீர்கள் என்பது நாட்டுமக்களுக்குத் தெரியும். காங்கிரசுக்கும், தி.மு க. வுக்கும் ரகசிய உடன்பாடு இருக்கிறது என்பது முழுக்கமுழுக்க பொய்:

மன்னை நாராயணசாமி: பொன்னப்ப நாடாரும் நானும் உறவு வைத்துக் கொண்டால் என்ன தவறு? ஒரு தமிழர் இன்னொரு தமிழரோடு உறவு வைத்துக் கொள்வதில் தப்பில்லை. முன்பு எங்களோடு நீங்கள் உறவு வைத்திருந்தீர்கள், இப்போது யாருடனோ உறவு வைத்துக்கொள்ளப் பார்க்கின்றீர்கள், அடுத்த ஆண்டுகள் கழித்துஉங்கள்கதி என்ன ஆகப்போகிறதோ? எங்களைப் பொருத்தவரை எங்களை தேடிவந்தவர்களை நாங்கள் பார்ப்போம்.

சுரேந்திரன்: முதலமைச்சர் சொல்வதை இவ்வளவு பச்சையாக மறுத்திருக்க வேண்டாம்.

பொன்னப்ப நாடார்:— நாங்கள் கட்சி மாறக்கூடியவர்கள் அல்ல. காந்தி, காமராஜ் வழியில் வந்தவர்கள்.

அனந்தநாயகி:—இப்படி ஒருவருக கொருவர் குத்தலாகப் பேசுவதன் உள்கருத்து என்ன? தமிழர்கள என்றுர்கள் இந்தியர்கள் என்ற உணர்ச்சி வர வேண்டாமா? பொன்னப்ப நாடார் கட்சி மாறமாட்டேன் என்றுர். அமைச்சர் மன்னை நாராயணசாமி காலையில் மந்திரியாக இருப்பேன்.

மாலையில் மந்திரியாக இருப்பேனு என்னவோ என்றுர். அது என்ன கொள்கை? 2, 3 மாதங்களுக்கு முன்பு வரை எங்களுடன் பழைய காங்கிரஸ் உறவு வைத்து இருந்தது. பிரதமராக இந்திரா தான் இருக்க வேண்டுமென காமராஜர் சொன்னுர். இப்போது அதிலிருந்து 'பல்டி' அடித்தது ஏன?

பொன்னப்ப நாடார்: யார் 'பல்டி' அடித்தார்கள் என்பது மக்களுக்குத்தெரியும் இந்திராவை பிரதமராக ஆக்கியவர் எங்கள் தலைவர் காமராஜ்தான். நாங்கள் கட்சி மாருமல் நிதானமிழக்காமல் இருக்கிறோம். பல ஆண்டுகளாக இந்தச் சட்டமன்றத்தில் உறுப்பினராக இருக்கிறேன். சந்தர்ப்பம் கிடைத்தால் இனிமேலும்இருப்பேன். ஆனல், கட்சிமாறி இங்கு வரமாட்டேன்.

ஏ. சுப்ரமணியம்: (பு.காங்) யாரைத் திருப்திபடுத்த இப்படிப் பேசுகிருர்கள் என்று தெரியவில்லை.

சுரேந்திரன்:—கட்சிக்கு விசுவாசமாக இருக்க வேண்டுமா? அல்லது தலைவருக்கு விசுவாசமாக இருக்க வேண்டுமா?

பொன்னப்ப நாடார்:— பழைய காங்கிரஸ் கட்சியின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுத் தான் நாங்கள் இயங்கி வருகிறோம். சந்தர்ப்பவாதிகளாக இருந்தால் வேறு இடத்தில் இருந்திருப்போம்.

## திருவோடு ஏந்தியது யார்? புது காங்கிரஸ்-தி. மு. க. வாக்குவாதம்

**சென்னை, பிப். 28—தி.மு க. அரசு மத்திய அரசிடம் திருவோடு ஏந்துவதாக சட்டசபையில்இன்று புதுகாங்கிரஸ் உறுப்பினர் அனந்தநாயகி கூறினுர் அமைச்சர் அன்பழகன் பதிலளிக்கையில் 'முன்பு ராஜாஜி காலத்தில் ஏந்த ஆரம்பித்த திருவோடு காமராஜர், பக்தவத்சலம் ஏந்தியபிறகு இப்போது கருணாநிதி கைக்கு வந்துள்ளது என்றுர்.**

துரைமுருகன் (தி. மு. க.) பேசுகையில் மத்திய அரசு திருவோடு ஏந்துவதாகக் கூறினுர்.

எதிர்பாராத செலவுகளுக்கு ரூ. 20கோடி ஒதுக்கக்கோரும் மசோதா இன்று சட்டசபையில் நிறைவேறியது.

இதன் மீது டாக்டர் ஹாண்டே (அ. தி. மு. க.) அப்துல்வகாப் (லீக்) துரைமுருகன் (தி.மு.க.) ஜோதியம்மாள் (பழைய காங்) ஆகியோர் பேசினர்.

### திருவோடு

அனந்தநாயகி பேசுகையில் கடந்த ஆண்டு ஒதுக்கப்பட்ட ரூ. 10 கோடி ஒழுங்காகச் செலவு செய்யப்படாமல் இருக்கையில், இப்போது ரூ. 20 கோடி ஒதுக்குவது ஏன் என்று கேட்டார். "நீங்கள் மேற்கொண்டு இருக்கும் துயர் தணிப்புப் பணிகள் மக்களுக்கு துயர் திணிப்புப் பணிகளாகவே உள்ளன. இப்படி இருக்கும் போது மத்திய அரசிடம் திருவோடு ஏந்தி அதை குறை கூறுகிறீர்கள்" என்று அனந்தநாயகி கூறினுர்.

அதற்கு அடுத்தபடியாகப் பேசிய துரைமுருகன் 'மத்திய அரசுக்குப் பணம் தேவைப்படும போதெல்லாம் நோட்டு அடிக்கிருர்கள் அல்லது திருவோடு தூக்குகிருர்கள். நகர்வாலாக்கள் வருகிருர்கள்" என்று கூறி வெங்கா தாக்கப்பட்டது பற்றிக் குறிப்பிட ஆரம்பித்தார்.

அப்போது துணை சபாநாயகர் கணபதி, விஷயத்தை விட்டு வேறு விஷயம் பற்றிப் பேசவேண்டாம்" என்றுர்.

ஹாண்டே (அ தி மு க):— எதிர்க்கட்சியினர் இப்படி விஷயத்துக்குப் புறம்பாகப் பேசினல் உட்கார வைத்து விடுகிறீர்கள். ஆனல் ஆளுங் கட்சியினர் இப்படியெல்லாம் பேசுகிருர்கள்.

### ராஜாஜி காலத்தில் திருவோடு

அமைச்சர் அன்பழகன்:— திருவோடு தூக்குகிருர்கள் என்று அனந்தநாயகி சொன்னதால்தான துரைமுருகன் அப்படிப் பேசினர்.

'முன்பு ராஜாஜி காலத்தில் ஏந்த ஆரம்பித்த திருவோடு காமராஜர் பக்தவத்சலம் ஆகியோர் ஏந்திய பிறகு இப்போது கருணாநிதிக்கு வந்திருக்கிறது.

அனந்தநாயகி:— நாங்கள் ஆட்சியில் இருந்தபோது காவடி தூக்குகிருர்கள், திருவோடு தூக்குகிருர்கள் என்று நீங்கள் பேசவில்லையா?

அமைச்சர்:— அன்பழகன் மாநிலத்திலும், மத்திய அரசிலும் ஒரே கட்சி ஆண்டு கொண்டிருந்தபோதே அத்தனை தடவை திருவோடு ஏந்தவேண்டி நேரிட்டதே என்பதைத்தான் அப்போது சுட்டிக்காட்டி வந்தோம்.

இறுதியில் விவாதத்துக்கு அமைச்சர் சாதிக்பாட்சா பதிலளித்தார்.

அவர் கூறியதாவது:—

சட்டமுறைகளுக்கு உட்பட்டுத்தான் இந்த ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த நிதி ஆண்டுதோறும் படிப்படியாக உயர்ந்து வந்திருக்கிறது. மற்ற மாநிலங்களிலும் இப்படி ஒதுக்கியிருக்கிருர்கள்.

இவ்வாறு அவர் கூறினுர்.

பின்னர் மசோதா நிறைவேறியது.

## சட்டசபை முன்பாக மாணவர் ஆர்பாட்டம்

சென்னை. பிப். 28—சட்டக் கல்லூரி மாணவர்கள் இன்று தடை உத்தரவை தந்திரமாக மீறி கோட்டைக்குள் நுழைந்து சட்டசபை முன்பாக ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

இன்று நடுப்பகலில் இச் சம்பவம் நடந்தது.

பட்டுகோட்டைராஜேந்திரன் இளங்கோ, புருஷோத்தமன், மன்னை பன்னீர்செல்வம் ஆகியோர் தலைமையில் சுமார் 60 மாணவர்கள் இவ்விதம் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இவர்கள் சட்டக் கல்லூரியில் தமிழில் சட்டம் படிப்பவர்கள் என்றுகூறப்படுகிறது தேர்வுகளை தமிழில் நடத்த வேண்டும 'உபகாரச் சமபளம கொடு' என்று அவர்கள் கோஷமிட்டனர். காமராஜ் வாழ்க என்றும் கோஷமிட்டனர்.

போலீசார் இவர்களைக் கைது செய்ய வந்தபோது முதல்வரைப் பார்க்காமல் போகமாட்டோம என்று அவர்கள் கூறினர்.

பின்னர்அவர்கள் அமைச்சர் மாதவனை சந்தித்து கோரிக்கைகளைக் கூறிவிட்டுக் கலைந்து சென்றனர்.

## எம். ஜி. ஆர். மீதான வழக்கில் ஐகோர்ட் தீர்ப்பு

**சென்னை, பிப், 28—எம். ஜி. ஆர். மீது தி. மு. க எம். எல். ஏ. போட்ட வழக்கை தள்ளுபடி செய்து ஹைகோர்ட் இன்று தீர்ப்பளித்தது.**

எம். ஜி. ஆர். திருப்பூரில் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் தன்னைப்பற்றி அவதூறுகப் பேசியதாக திருப்பூர் எம். எல். ஏ. துரைசாமி (தி மு க) போட்டிருந்த அப்பீல் வழக்கில் இன்று தீர்ப்பளிக்கப்பட்டது.

எம். ஜி. ஆர். 1972-ம் ஆண்டு நவமபர் 27ந் தேதி திருப்பூரில் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசினுர்.

எம்.ஜி.ஆரின் பேச்சில் ஒரு பகுதி தன்னை அவதூறு செய்வதாக உள்ளது என்று கூறி திருப்பூர் எம். எல். ஏ. துரைசாமி முதலில் திருப்பூர் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் எம். ஜி. ஆர். மீதும் எம். ஜி. ஆரின் பேச்சை பிரசுரித்ததற்காக கே. ஏ. கிருஷ்ணசாமி மீதும் வழக்குப் போட்டார். அக்கோர்ட்டில் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

இத்தீர்ப்பை ஆட்சேபித்து துரைசாமி சென்னை ஹைகோர்ட்டில் அப்பீல் செய்தார்.

இந்த அப்பீல் வழக்கை ஐகோர்ட் நீதிபதி என். கே. ரெட்டி விசாரித்து அந்த அப்பீல் வழக்கை தள்ளுபடி செய்து இன்று தீர்ப்பளித்தார்.

"எம். ஜி. ஆரின் பேச்சு துரைசாமியைத்தான் குறிக்கிறது என்று திருப்திகரமாக நிரூபிக்கப்படவில்லை" என்று நீதிபதி தனது தீர்ப்பில் கூறினுர்.

## புதிய தொழிற்சாலைகள்: சாதிக்பாட்சா தகவல்

சென்னை, பிப். 28— தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகம் ஆண்டு ஒன்றுக்கு 700 டன் சாயம் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை துவக்க மத்தியஅரசிடமிருந்து பூர்வாங்க அனுமதி பெற்றிருக்கிறது என்று தொழில் அமைச்சர் சாதிக்பாட்சா தெரிவித்தார்.

### காஸ்டிக் சோடா

எண்ணூர் அருகே 33 ஆயிரம் டன் காஸ்டிக் சோடா தயாரிக்கும்தொழிற்சாலையை அமைக்க ஒரு தனியார் நிறுவனம் மத்திய அரசிடம் இருந்து பூர்வாங்க அனுமதி பெற்று இருக்கிறது என்றும் அமைச்சர் தெரிவித்தார்.

கூடடுத்துறையில் சதர்ன் போராக்ஸ் என்ற நிறுவனம் ஆண்டு ஒன்றுக்கு 15 ஆயிரம் டன் போரக்சர், 3 ஆயிரம் டன் போரிக் ஆசிட்டும் தயாரிக்க தொழிற்சாலைஅமைத்து வருகிறது. 75ம் ஆண்டு மத்தியில் உற்பத்தி துவங்கும்.

## சட்டசபையில் மின்சப்ளை திடீர் நிறுத்தம்

சென்னை, பிப். 28—இன்று சட்டசபையில் கேள்வி நேரம் நடந்துகொண்டு இருந்த போது இருமுறை மின்சார சப்ளை தடைப்பட்டது, மின் விளக்குகள் சிறிதுநேரத்திற்குள் மீண்டும் எரிய ஆரம்பித்தன.

## தென் சென்னையில் புது ஆஸ்பத்திரி

சென்னை, பிப். 28—தென் சென்னையில் கலைஞர் கருணாநிதி நகரில் 100 படுக்கை வசதிகள் கொண்ட பொது மருத்துவமனை கட்ட அரசு ஆணை பிறப்பித்து இருக்கிறது. இதற்கான பணி துவக்கப்பட்டு விட்டது.

இந்த தகவலை சட்டசபையில் அமைச்சர் அன்பழகன் கேள்வி ஒன்றுக்குப் பதில் அளித்தபோது தெரிவித்தார்.

தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருவாரூர் மருத்துவமனையில் 16 படுக்கை வசதிகள் கொண்ட 3 வார்டுகளை தனியார் உதவியுடன் அமைக்க ஏற்பட்டு நடந்து வருகிறது என்றும் அமைச்சர் தெரிவித்தார்,

## சென்னையில் ரஷிய தூதரக புது அதிகாரி

சென்னை, பிப். 28—சென்னையில் ரஷிய தூதரக அதிகாரியாக கொஷெலவ் பொறுப்பு ஏற்றுள்ளார். கல்வி அமைச்சர் நெடுஞ்செழியனை அவர் சந்தித்துப் பேசியபோது அவருடன் அமைச்சர் கைகுலுக்கி பாராட்டுதல் தெரிவித்தார்.

சென்னையில் ரஷிய தூதரக அதிகாரி பொறுப்பை விட்டு விலகுகிற கார்ட்செங்கோவும் அவருடன் வந்திருந்தார்.

ஆஸ்பத்திரியிலிருந்து

## குழந்தை திருடிய பெண்ணுக்கு ஜெயில்

சென்னை, பிப் 28—பிறந்து 4 நாட்கள் ஆன குழந்தையை ஆஸ்பத்திரியிலிருந்து திருடிச் சென்று விற்க முயன்ற நாகம்மாள் என்னும் பெண்ணுக்கு கோர்ட்டில் 6 மாத சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

பத்ருன்னிசா என்னும் பெண்ணுக்கு ராயபுரம் ஆர் எஸ். ஆர். எம். ஆஸ்பத்திரியில் குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்த 4-வது நாளன்று திடீரென்று குழந்தை காணமல் போயிற்று.

கொருக்குப்பேட்டையைச் சேர்ந்த நாகம்மா என்னும் பெண் மேற்படி பச்சிளம் குழந்தையை கொருக்குப்பேட்டையில் யாரோ ஒருவருக்கு விற்க முயன்றபோது போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் நாகம்மாவை கைது செய்தார்.

நாகம்மா மீது 3-வது மெட்ரோபாலிடன் கோர்ட்டில் வழக்குத் தொடரப்பட்டு 6 மாத கடுங்காவல்தண்டனை விதிக்கப்பட்டது.

## ஏ. ஜி. வெங்கடாச்சாரி காலமானர்

சென்னை, பிப். 28— தினமணி பத்திரிகையின் துணை ஆசிரியர் ஏ. ஜி. வெங்கடாச்சாரி இன்று திடீரென்று மரணம் அடைந்தார். அவருக்கு வயது 64.

அவர் வழக்கம்போல இன்று காலை அலுவலகத்திற்குவந்து வேலை பார்த்தார்.

நாற்காலியில் அமர்ந்திருந்த போது திடீரென்று அவருக்கு மாரடைப்பு ஏற்பட்டது. அவர் மயக்கம் அடைந்தார்.

உடனே அவரை அழைத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்கு புறப்பட்டனர். ஆனல் வழியில் அவர் இறந்தார்.

அவருக்கு 2 புதல்வர்களும், ஒரு புதல்வியும் இருக்கிருர்கள்.

அவர் 41 ஆண்டுகாலமாக தினமணி பத்திரிகையில் பணியாற்றியவர்.

## குருட்டு பெண்ணுக்கு பார்வை அளித்து ரஷியாவில் சாதனை

மாஸ்கோ, பிப். 28—குருடர்களுக்கு கண்பார்வை அளிப்பதில் ரஷிய டாக்டர்கள் வெற்றி பெற்றிருக்கிருர்கள்.

7 வயது பெண் ஒருத்திக்கு இரு கண்களும் குருடாக இருந்தன. மாஸ்கோவிலுள்ள கண் வைத்திய மருத்துவமனை ஒன்றில் தலைசிறந்த டாக்டர்கள் அவளுக்கு [illegible]ந்தசிகிச்சை அளித்து [illegible]ம் கண் பார்வை பெறும்படி செய்து விட்டனர்.

அந்தப் பெண், பிரிட்டிஷ் நாட்டைச்சேர்ந்தவள் என்று ரஷிய செய்தி நிறுவனம் அறிவித்தது.

நவமணி

சென்னை 28—2—1975 வெள்ளிக்கிழமை

# பொதுத்துறை தொழில்கள்

பொதுத்துறை தொழில்களின் மத்திய வாரியத்தின் இயக்குநர் திரு. பெர்னுண்டஸ் சென்னையில் நல்ல ஆய்வுரை வழங்கியுள்ளார். அவைகளை நாட்டுநலனில் அக்கறையுள்ள எல்லோரும் ஆராய்ந்துநல்லதொரு முடிவிற்கு வருவது நல்லது.

தொழில் தொடங்கு முன்னர் அந்த தொழில் எதற்காக தொடங்கப்படுகிறது என்பது பற்றிய கொள்கை விளக்கம், அதன முதலீடு பற்றிய முடிவுகள், தக்க நிர்வாக அதிகாரிகளை நியமிப்பது, நிர்வாக குழுவை அமைப்பது, தேசிய கொள்கையை வகுப்பது ஆகிய 5 முக்கிய அம்சங்களில் மத்திய அரசு திட்டவட்டமான உறுதியான முடிவு எடுக்க வேண்டும் என்று அவர் கூறியுள்ளதை வரவேற்க வேண்டும்.

இந்தியாவைப் போன்ற மக்கள் பெருக்கம் உள்ள நாடுகளில் எல்லா மக்களும் நலம்பெற சில முக்கிய தொழில்கள் தேசீயமயமாக்கப்பட வேண்டுவது அவசியமே யாகும்.

ஆனல் தேசிய மயமாக்கப்பட்ட தொழில்கள் லாபகரமாகவும் உற்பத்தி திறனுடனும் செயலாற்றுவது அதைவிட அவசியம்.

தேசிய மயமாக்கப்பட்ட தொழில்களை அந்தந்த தொழில்களின் நுட்பம் தெரிந்த தொழில்வல்லுநர்களே இயக்குநர்களாக இருந்து நிர்வகிக்க வேண்டும்.

அந்தத் தொழிற்சாலையின் குறிக்கோள் மக்களுக்கு சிறந்த பொருட்களை குறைந்த விலையில் கிடைக்கச் செய்வதேயாகும் என்பதை அரசும் ஊழியர்களும் உணரவேண்டும்.

இதற்கு அடிப்படையில் இந்தியா முழுவதும் ஒரே தொழிற் கொள்கை, ஒரே கூலித் திட்டம், ஒரே பொருளாதாரக் கொள்கை இன்றியமையாதது ஒரே இடத்தில் இருக்கின்ற அரசு நிறுவனங்களில் வெவ்வேறு சம்பள விகிதமும் வெவ்வேறு முதலீட்டுக் கொள்கையும் இருப்பது எவ்வளவு முரண்பாடான தாகும்!

ஆகையால் தக்க சமயத்தில் பெர்னுண்டஸ் கூறிய இந்தஆய்வுரையை, அரசும் அரசியல் தலைவர்களும் தொழிற்சங்கத் தலைவர்களும் அறிஞர்களும் ஆராய்ந்து நல்லதொரு திட்டவட்டமான உறுதியான கொள்கையை உருவாக்கி அதன்படி பொதுத்துறை தொழில்கள் நடைபெற ஆவன செய்ய வேண்டும்.

காவிரி தகராறு

# “பாரபட்சம் இல்லை”: தி. மு. க. புகாருக்கு இந்திரா பதில்

புதுடெல்லி, பிப். 28— 'காவிரி தகராறில் அல்லது வறட்சி நிவாரண உதவியில் மத்திய அரசு பாரபட்சம் காட்டவில்லை' என்று பிரதமர் இந்திரா காந்தி மக்கள் சபையில் பேசுகையில் கூறினார்.

மத்திய அரசு காவிரி தகராறில் கர்நாடகாவுக்கு ஆதரவான போக்கைக் காட்டுவதாக தி.மு.க. எம்.பி. ஒருவர் கூறிய புகாரை பிரதமர் இந்திரா மறுத்தார்.

“மத்திய அரசு பாரபட்சம் காட்டுவதாகக் கூறப்படும் புகார் முற்றிலும் நியாய மற்றது” என்றார் இந்திரா.

ஜனாதிபதி உரைமீது மக்கள் சபையில் நடந்த விவாதத்துக்கு இந்திரா பதிலளித்து பேசினார்.

## இந்திரா மறுப்பு

அப்போது அவர் நதிநீர்த் தகராறுகள் பற்றிக் குறிப்பட்டார். தமிழ்நாட்டுக்கு வறட்சி நிவாரண உதவி அளிப்பது பற்றியும் குறிப்பிட்டார்.

தமிழ்நாட்டுக்குப் போதிய உதவி அளிக்கவில்லை என்று கூறப்பட்டதையும், தமிழக மக்களுக்கு அனுதாபம் காட்டவில்லை என்று கூறப்பட்டதையும் மறுக்கிறேன்” என்று இந்திரா சொன்னார்.

“காவிரி தகராறில் மத்திய அரசு கர்நாடகாவுக்கு சாதகமாக நடந்து கொள்வதாகக் கூறப்படுவதும் சரியல்ல” என்று இந்திரா கூறினார்.

எல்லா மாநிலங்களும் நதிநீர்த் தகராறுகளை தேசியக் கண்ணோட்டத்துடன் அணுக வேண்டும் என்று இந்திரா கேட்டுக்கொண்டார்.

“வறட்சி குறித்து மத்திய அரசு உதாசீனமாக இருப்பதாகக் குற்றம் சாட்டுவதும் தவறு” என்றார் இந்திரா.

“எந்த அரசும் வறட்சியை ஒருவாய்ப்பாகப்பயன்படுத்தி மத்திய அரசிடமிருந்து முடிந்தவரை பணம் பெறப் பார்க்கக் கூடாது. கிடைக்கின்ற பணத்தை சரியாகப் பயன்படுத்த முயற்சிக்க வேண்டும்” என்றும் இந்திரா கூறினார்.

## எதிர்க்கட்சிகள் மீது தாக்கு

இந்திரர் தமது பேச்சின் போது எதிர்க்கட்சிகளைக் கடுமையாகத் தாக்கிப் பேசினார்,

குறிப்பாக ஜெயப்பிரகாஷ் தலைமையிலான இயக்கத்தையும் தாக்கினார்.

தேர்தல்சட்டங்களை மாற்ற வேண்டுமென்று ஜெயப்பிரகாஷ் கோரி வருவதுபற்றி இந்திரா குறிப்பிட்டு, ஜெயப்பிரகாஷ் அமைத்த நிபுணர் கமிட்டியும் கூட பெரிய மாறுதல்களைச் சொல்லவில்லையே என்று கூறினார்.

“அடிப்படை மாறுதல்களை பொதுக் கருத்தை அறிந்து தான் செய்யவேண்டும் என்று அக் கமிட்டியே கூறியுள்ளது. நானும் இதைத்தானே சொல்லிவருகிறேன்” என்றார் இந்திரா.

“இப்போதைய தேர்தல் முறைகள் அரசில் நிர்ணய சபையில் இடம் பெற்றிருந்த விற்பன்னர்களால் வகுக்கப்பட்டவை. இன்று கிளர்ச்சி நடத்துபவர்கள், அன்று அரசியல் நிர்ணயசபையில் இடம் பெற்றிருந்தவர்களை விட என்ன பெரிய புத்திசாலிகளா? திறமைசாலிகளா? சட்டவல்லுநர்களா? அரசியல் விற்பன்னர்களா? கடமைப்பற்று கொண்டவர்களா? தீர்க்கநோக்கு கொண்டவர்களா?” என்று இந்திரா கேட்டார்.

ஜெயப்பிரகாஷின் கிளர்ச்சி பற்றி இந்திரா குறிப்பிட்டு அக்கிளர்ச்சியானது இந்தியாவைத் தாக்குவதற்கு இந் நாட்டின் எதிரிகளுக்கு ஒரு கருவியாகவே அமைந்திருக்கிறது” என்றார்.

“ஜெயப்பிரகாஷின் கிளர்ச்சி தவறான பாதையில் திரும்பியுள்ளது. ஏனெனில் அது தவறான அடிப்படையில் ஆரம்பிக்கப்பட்டதாகும். அரசியல் சட்டம் நன்கு செயல்படுகிறதே என்பதே அவர்களுடைய வருத்தமாக இருப்பதாகத் தோன்றுகிறது. அரசாங்கம் செயல்பட்டு வருகிறதே என்பது அவர்களுடைய ஆத்திரமாக உள்ளது” என்று இந்திரா சொன்னார்.

## இந்திரா கிண்டல்

“அவர்கள் ஆட்சிக்கு வந்தால் ஒருவேளை தொழிற்சாலைகள் மூடப்பட்டு அவை வேலை செய்யாமல் உற்பத்தி பெருகும் போல இருக்கிறது. அரசாங்க ஊழியர்கள் ஆர்ப்பாட்டங்களை நடத்துவதில் ஈடுபட்டிருக்க அரசு வேலைகள் தானக நடைபெறும் போல இருக்கிறது” என்று இந்திரா கிண்டலாகக் கூறின.

## எங்கிருந்து பணம் வருகிறது?

“தூய்மைப்படுத்துவோம்” என்று கூறி சிலர் இன்று கிளர்ச்சி நடத்துகின்றனர். தங்களுடைய லட்சியங்கள் என்ன என்பது அவர்களுக்கே புரியவில்லை. சரமாரியாக அவர்கள் புதுப்புது கருத்துகளை யெல்லாம் கூறி வருகின்றனர். இப்போதைய தேர்தல் முறைகளை அப்படியே வைத்துக்கொண்டு பணமில்லாமலே தேர்தலை நடத்த முடியும் என்பது அவர்கள் புதிதாகக் கூறியுள்ள கருத்தாகும்.

“அதே நேரத்தில் அவர்கள் ஆர்ப்பாட்டங்களையும், கிளர்ச்சிகளையும் நடத்த பெரும் பணம் செலவிட்டு வருகின்றனர். இந்தப் பணம் எல்லாம் எங்கிருந்து வருகிறது?” என்று இந்திரா கேட்டார்.

## பேசத்தயார்

நிர்வாக சீர்திருத்தம், தேர்தல் சட்ட சீர்திருத்தம் உட்பட, நாட்டை எதிர் நோக்கியுள்ள எல்லா பிரச்னைகள் பற்றியும் எதிர்க்கட்சிகளுடன் பேசத்தயார் என்று இந்திரா காந்தி அறிவித்தார்.

“முதற்படியாக தேர்தல் சட்டங்கள் பற்றி வட்ட மேஜை மாநாடு நடத்தலாம்” என்று இந்திரா கூறினார்.

## திடீர் தேர்தல்

இந்திரா மேலும் பேசுகையில் திடீர் தேர்தலை நடத்தும் திட்டம் எதுவும் இல்லை என்றார்.

பாகிஸ்தானுக்கு அமெரிக்கா மீண்டும் ஆயுத உதவி அளிப்பது பற்றி இந்திரா மக்கள் சபையிலும் கவலை தெரிவித்தார்.

## மாருதி கார் விவகாரம்

இந்திராவின் மகன் சம்பந்தப்பட்ட மாருதி கார் கம்பெனி பற்றி இந்திரா குறிப்பிட்டு அக் கம்பெனிக்கு சலுகை எதுவும் காட்டப்படவில்லை என்றார்.

“அங்கு ஊழல் எதுவும் இல்லை. தவறு எதுவும் நடக்கவில்லை” என்று இந்திரா காந்தி சொன்னார்.

# சென்னை மார்க்கெட்

சென்னை, பிப். 28—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 572 00

(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 54 00

**வெள்ளி**

பார்வெள்ளி (1 கி. கி.) ரூ. 1110 00

உள்ளூர் 1030 00

(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 10

**மணிலாப்பயறு**

மாரிகால பட்டாணி ரூ. 285 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 760 00

சில்லரை விலை ரூ. 8 10

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 475 00

சேலம் தாமரை அன்னம் மார்க் 16 05 கி. கி.) ரூ. 75 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 176 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 138 00

விற்பனை வரி தனி

சில்லரை கிலோ 1-க்கு ரூ. 8 75

**கடலைப்பிண்ணாக்கு**

70 கி.கி. கொண்ட மூட்டைக்கு எக்ஸ்பெல்லர் ரூ. 73 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 424 00

முதல் ரூ. 425 00

தமிழகத்திற்கு கர்நாடகம் தண்ணீர் தராவிட்டால்

# ஒரு லட்சம் டன் அரிசி உற்பத்தி குறையும்: கருணாநிதி அறிவிப்பு

சென்னை, பிப். 28—கபினி அணையில் தேக்கியுள்ள தண்ணீரை தமிழ்நாட்டுக்கு கர்நாடக அரசு சப்ளை செய்யாவிட்டால், தமிழ்நாட்டில் அரிசி விளைச்சல் ஒரு லட்சம் டன் குறையும் என்று முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.

கவர்னர் உரை மீது நேற்று மேலவையில் தொடர்ந்து விவாதம் நடந்தது. புது காங்கிரஸ் உறுப்பினர் எம். ஆறுமுகசாமி பேசுகையில் இப்போது அதிக நிலப்பரப்பில் நெல் சாகுபடி இல்லாததால், கபினி நீர் வந்தாலும் அதிகமான பலன் ஏற்படாது என்று கூறினார்.

அப்போது முதலமைச்சர் கருணாநிதி குறுக்கிட்டு உறுப்பின தவறான கருத்தைத் தெரிவிக்க வேண்டாம் என்றார். கபினியில் தேக்கிவைக்கப்பட்ட தண்ணீர் தமிழகத்திற்குக் கிடைக்காவிட்டால் ஒரு லட்சம் டன் அரிசி உற்பத்தி பாதிக்கப்படும் என்று அவர் சொன்னார்.

ஆறுமுகசாமி மேலும் பேசுகையில், காவிரி நீர்ப்பங்கீடு பிரச்னை குறித்து மைசூர் சட்டசபையில் மாநில முதலமைச்சர் பேசியதை பார்க்கும் போது, பேசித் தீர்க்க முடியாத அளவுக்கு இடர்ப்பாடு இருப்பதாகக் கருதுவதற்கில்லை என்றார்.

முதலமைச்சர் கருணாநிதி குறுக்கிட்டு, டெல்லியிலும் பெங்களூரிலும பேச்சு வார்த்தை நடத்தியும் கர்நாடக அரசு கபினியில் தேக்கி வைத்துள்ள நீரைத் திறந்து விடவில்லை; அந்த நீரை திறந்து விட்டால் தான் நல்லெண்ணத்தோடு பேச்சு நடத்தும் உணர்வு ஏற்படும் என்று சொன்னேன். பேச்சு வார்த்தைக்குத் தயார் என்று கூறும் கர்நாடக அரசு இதுபற்றி மவுனம் சாதிக்கிறது என்று கூறினார்.

## தென் ஆற்காடு மாவட்டத்தில்

அரிஜன நலத்துறை அமைச்சர் ராஜாங்கம் குறுக்கிட்டு, தென்னாற்காடு மாவட்டத்தில பத்தாயிரம் ஏக்கர் நிலம் தண்ணீர் இல்லாமல் வாடுகிறது என்றார். அமைச்சர் மன்னை நாராயணசாமியும், கபினி தண்ணீர் கிடைக்காவிட்டால், ஒரு லட்சம் டன் அரிசி உற்பத்திப் பாதிக்கப்படும் என்றார்.

ஆறுமுகசாமி தொடர்ந்து பேசுகையில் கபினி தண்ணீர் இல்லாத காரணத்தால் ஒரு லட்சம் டன்அரிசி உற்பத்தி குறையும் என்ற நிலை இருந்தால், கபினி நீரைத் திறந்து விடும்படி தாமும் கோருவதாகச் சொன்னார்.

## முத்துராமலிங்கத் தேவருக்கு சிலை

சக்திமோகன் (பார்வர்ட் பிளாக்)பேசுகையில் அரிசியை அதிகம் வழங்காமல் கோதுமையைக் கொடுப்பதால், அதைச் சமைப்பதற்கு வேண்டிய எண்ணெய் வகைகளை வாங்க அதிகம் செலவிட வேண்டியிருக்கிறது என்றார். அதிகமாகக் கோதுமையை தருவதற்குப் பதில் அரிசி கொடுக்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

சக்தி மோகன் மேலும் பேசுகையில் முத்துராமலிங்கத்தேவருக்கு நினைவு மண்டபம் கட்டவேண்டும் என்று கூறினார்.

கருணாநிதி குறுக்கிட்டு, இதற்காக ஒரு குழு அமைத்துச் செயல்பட்டால் அரசு உதவத் தயார் என்றார்.

ராம சுப்பையா (தி. மு. க.): பேசுகையில் வறட்சி நிவாரணப் பணிகளை அரசு சிறப்பான முறையில் செய்து வருவதாகக்கூறி, பாராட்டும் தெரிவித்தார்.

ரஸல்ராஜ் (தி. மு. க.) பேசுகையில், கேரள மாநிலத்திற்கு தேவைக்கும் அதிகமாக கோதுமை தருகின்ற மத்திய அரசு தமிழ் நாட்டிற்குத் தேவையான உணவு தான்யம் கொடுக்காததற்கு காரணம் மாறி வரும் அரசியல் சூழ்நிலைதான் என்றார். குமரி மாவட்டத்திற்கு வறட்சி நிவாரணப் பணிகளுக்காக ரூ. 25 லட்சம் ஒதுக்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

# மிஸ்ரா கொலை விசாரணை முக்கியமான கட்டம்: மத்திய மந்திரி தகவல்

புதுடெல்லி, பிப். 28— மிஸ்ரா கொலை விசாரணை மிகவும் முக்கியமான கட்டத்தில் இருப்பதாகவும், கைது செய்யப்பட்ட 14 பேர்களில் ஒருவர் ஜுடிஷியல் மாஜிஸ்திரேட் முன்னிலையில் ஒப்புதல் வாக்குமூலம் அளித்ததாகவும் உள் விவகார துணை மந்திரி ஓம்மேத்தா தெரிவித்தார்.

கடந்த ஜனவரி மாதம் 2-ம் தேதி சமஷ்டிப்பூரில் குண்டு வெடித்த சம்பவம் குறித்து ராஜ்யசபையில் 4 மணி நேரம் நடந்த விவாதத்திற்கு அவர் பதிலளித்தார்.

விசாரணை மிகவும் முக்கியமான கட்டத்திலிருப்பதாலும், இதுசம்பந்தமாக முக்கியமான சாட்சிகள் விசாரிக்கப்படுவதாலும் ஒப்புதல் வாக்குமூலங்களின் விவரத்தைக் கூறுமாறு தம்மை வலியுறுத்த வேண்டாமென்று மெம்பர்களுக்கு ஓம்மேத்தா வேண்டுகோள் விடுத்தார்.

மேலும் அவர் கூறியதாவது!—

சி. பி. ஐ. புலன் விசாரணை ஆக்கபூர்வமான பலனுக்கு வழிவகுக்க வேண்டும் என்றும், குற்றவாளிகள் கண்டு பிடிக்கப்படவேண்டும என்றும் சர்க்கார் ஆவலாக உள்ளது. இதுவரை கைது செய்யப்பட்ட நபர்களில் யாரும் வலது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்களல்ல என்று நிச்சயமாகக் கூறமுடியும்.

கைது செய்யப்பட்ட நபர்கள் ஆர். எஸ். எஸ். ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களா அல்லது ஆனந்த மார்க்கத்தைச் சேர்ந்தவர்களா என்று யோகேந்திர சர்மா (வ. கம்.) குறுக்கிட்டுக் கேட்டார்.

இவ் விஷயம் இன்னமும் புலன் விசாரணையில் இருப்பதால் மேற்கொண்டு விவரங்களைத் தெரிவிப்பதற்கில்லை என்று துணை மந்திரி குறிப்பிட்டார்.

பொதுமக்கள் நம்பிக்கையை மீண்டும் ஏற்படுத்துவது அரசின் கடமை என்றும், இந் நோக்கம் காரணமாகவே இவ்விஷயம் முழுவதையும் குறித்து விசாரிக்க சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஒருவரை சர்க்கார் நியமித்திருப்பதாகவும் அவர் சொன்னார். கமிஷனின் பணிகள் மிகவும் விரிவானவை என்றார்.

சி. பி. ஐ. தொடர்ந்து புலன் விசாரணை செய்யும் என்றும், கமிஷன் அவ்வப்போது விரும்பும் சமயத்தில் புலன் விசாரணையை பரிசீலிக்கும் என்றும் கூறினார்.

பார்லிமெண்டிலும், பார்லிமெண்டுக்கு வெளியேயும் மிஸ்ராவைக் குறித்து அவதூறுப் பிரசாரம் செய்யப்பட்டதாக அவர் குறிப்பிட்டார். சமஷ்டிபூர் சம்பவத்துக்கு முன்னதாக, பீஹாரில் கிளர்ச்சி நடப்பதையொட்டி, நாட்டில் வன்முறை சூழ்நிலை தோற்றுவிக்கப்பட்டதாக ஓம்மேத்தா குற்றஞ்சாட்டினார்.

மற்றொருவர் போலீசாரிடம் ஒப்புதல் வாக்குமூலம் அளித்ததாகவும் அவர் கூறினார்.

விவாதத்தின்போது உள் துறை மந்திரி பிரும்மானந்த ரெட்டி ராஜினாமா செய்ய வேண்டும் என்றும், பீகாரில் கபூர் மந்திரிசபையை டிஸ்மிஸ் செய்யவேண்டும் என்றும் ஜனசங்க மெம்பர் பி எஸ் ஷெகாவத் கோரினர். சம்பவ தினத்தன்று சமஷ்டி பூரில் பந்தோபஸ்து ஏற்பாடுகள் சீராக இல்லாததற்கு பிரும்மானந்த ரெட்டியும், கபூரும் பொறுப்பாளிகள் என்றார். குண்டு வெடித்த சம்பவத்துக்குப் பின்னர் மிஸ்ராவுக்குச் சிகிச்சை யளித்த டாக்டர்களையும், சமஷ்டி பூரிலிருந்து பாட்னவுக்கு மிஸ்ராவுடன் சென்ற டாக்டர்களையும் சஸ்பெண்டுசெய்யவேண்டும் என்றும் ஜனசங்க மெம்பர் கோரினர்.

# ‘அ.தி.மு.க.ஆட்சிவந்தால் லஞ்சம் பெருகும்’: காமராஜ் பேச்சு

நாகர்கோவில், பிப். 28—தமிழ்நாட்டில் அண்ணா தி. மு. க. ஆட்சி ஏற்பட்டால், லஞ்சம் பெருகும் என்று பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜர் கூறினர்.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள வள்ளியூரில் நடந்த பொதுக்கூட்டத்தில் காமராஜர் பேசினர்.

காமராஜ் பேசியதாவது:—

நம் நாடு பழமையானது. பல்வேறு சிரமங்களுக்கிடையே சுதந்திரம் பெறுவதற்காகப் பாடுபட்டோம் சுதந்திரம் வந்ததிலிருந்து தொழிலும் கல்வியும் திட்டமிட்டு வளர்ச்சியடைந்து வந்தன.

ஆனல் கடந்த சில ஆண்டுகளாக தேக்கமடைந்து சீர்கெட்டிருக்கிறது. பணத்தாசையும் பதவி ஆசையுமே இதற்குக் காரணம். பணத்தினல் எதையும் சாதிக்கலாம் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. பதவி ஆசையும் பெருகி விட்டது.

தியாக மனப்பான்மை இல்லாமற் போய்விட்டது. பதவி மக்களுக்கு சேவை செய்யத்தான் என்று காந்தியடிகள் சொன்னர். பணம் சேர்ப்பதற்காக அல்ல என்றும் சொன்னர். அதன்படி நடந்திருந்தால் இந்த நிலை ஏற்பட்டிருக்காது.

மக்களின் வெறுப்பை தி. மு. க.வினர் சம்பாதித்துக் கொண்டார்கள். அவர்கள் மீண்டும் ஆட்சிக்கு வரமுடியாது என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. இதனல் அ. தி. மு. க. பதவிக்கு வந்துவிடுமோ என்று நினைத்து அதற்குஆதரவளிக்கக்கூடாது பழையபடி மக்கள் அதே தவறை செய்யக்கூடாது' அ. தி. மு. க. ஆட்சிக்கு வந்தால் லஞ்சமும், ஊழலும் பெருகும். அதனல்தான் இந்த இரு கட்சிகளுடனும் கூட்டுச் சேரக்கூடாது என்று முடிவு செய்தேன என்றார் காமராஜர்.

# கையெழுத்து போட்டு புறக்கணிப்பா? கருணாநிதி கேள்வி

சென்னை, பிப். 28—கவர்னர் உரை நிகழ்த்திய போது அ. தி. மு. க, வலது கம்யூனிஸ்டு, தா. மு. க. ஆகிய கட்சியினர் புறக்கணிப்பு செய்தது பற்றி முதல்வர் கருணாநிதி இன்று தனது பேச்சில் குறிப்பிட்டார்.

“புறக்கணிப்பதாகக் கூறியவர்கள் அன்று கையெழுத்துப் போட்டு அன்றைய தினத்துக்கு உரிய படியைக் கேட்டிருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் அன்றையக்கூட்டத்தில் கலந்து கொண்டதாகத் தான் பொருள் என்று முதல்வர் கூறினர்.

“எம். ஜி. ஆர். சட்டசபைக்கு வருவதில்லை என்று கூறும்போது அவர்கையெழுத்துப் போடுகிறார், ஆகவே அவர் வருவதாகத்தான் அர்த்தம் என்று அவர்கள் வாதிடுகிறார்கள்.

அப்படிப் பார்க்கும்போது கவர்னர் உரை நிகழ்த்திய நாளன்று கையெழுத்துப் போட்டுவிட்டு வராமல் இருந்தவர்களும், சட்டசபைக்கு வந்ததாகத்தான் அர்த்தம் என்று முதல்வர் கருணாநிதி கூறினர்.

அப்போது எட்மண்ட் (அ. திமுக): குறுக்கிட்டு, “நாங்கள் சட்டசபையைப் புறக்கணிக்கவில்லை, கவர்னரின் உரைக்கு எங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தோம்” என்று கூறினர்.

# நியூயார்க் பருத்திமார்க்கெட்

நியூயார்க், பிப். 27—

ஆரம்ப விலை 40-85

முடிவு விலை 40-30

# மழைக்காக கபாலி கோயிலில் பிரார்த்தனை

சென்னை, பிப். 28—தமிழகம் முழுவதும் மழை பெய்ய வேண்டி மயிலை, கபாலீஸ்வரர் கோவிலில் வருகிற ஞாயிறு (2-ம் தேதி) அன்று பிரார்த்தனைக் கூட்டம் ஒன்று நடைபெறுகிறது.

காலை 7 மணிக்கு இதை பஜனை நடத்தப்படும் என்று மயிலாப்பூர் காமாட்சி தாசர் தெரிவித்துள்ளார்.

# எதிர்க்கட்சி அரசு எப்படி இருக்கும்? இந்திரா வருணனை

புதுடெல்லி, பிப். 28— ஜெயப்பிரகாஷ் தலைமையில் அணி திரண்டுள்ள எதிர்க்கட்சிகள் ஆட்சிக்கு வந்தால் அந்த அரசு எப்படி இருக்கும் என்று பிரதமர் இந்திரா காந்தி நேற்று மக்கள் சபையில் பேசியபோது வருணித்தார்.

‘அந்த அரசுக்கு மார்க்சிஸ்ட் கட்சிதான் மூளை பழைய காங்கிரஸ்தான் இருதயம். சோஷலிஸ்டுக் கட்சி நாக்காகவும், நுரையீரலாகவும் இருக்கும். ஜனசங்கம் கைகளாகவும், கால்களாகவும் இருக்கும்” என்று இந்திரா காந்தி வருணித்த போது புதுகாங்கிரஸ் மெம்பர்கள் குலுங்கக் குலுங்கச் சிரித்தனர்.

அந்த நேரத்தில் எதிர்க்கட்சியினர் குறுக்கிட்டு எதுவும் கூறவில்லை.

எனினும் இந்திய மக்கள் கட்சியின் தலைவர் பிலுமோடி இந்திரா பேச்சின போது வேறு ஒரு சமயத்தில் தனது கணையைத் தொடுத்தார்.

இந்திரா தனது பேச்சின் போது இந்த ஆண்டு “பெண்களின் ஆண்டாக” கொண்டாடப்படுவதைக் குறிப்பிட்டார்.

உடனே பிலுமோடி பாய்ந்து எழுந்து, “ஆண்டவனே அப்படியானல் இந்த ஆண்டில் எங்களால்உங்களைப் பதவியிலிருந்து வெளியேற்றவே முடியாது. என்ன செய்வது?” என்றுதமாஷாகக் கூறி பெருமூச்சுவிட்டார்.

இதைக் கேட்டு இந்திரா புன்முறுவல் பூத்தார். அருகிலுள்ளமந்திரிகளும்சிரித்தனர்

# THYAGARAYANAGAR CO-OPERATIVE BANK LTD.,

Estd. 1933 No. 3, Doraiswamy Road, Thyagarayanagar, Madras-17 Phone: 441353

THE THIRD SCHEDULE—FORM A

## BALANCE SHEET AS AT 30—6—1974.

| Year ending 30—6—1973 Rs. Ps. | CAPITAL AND LIABILITIES | Year ending 30—6—1974 Rs. Ps. | Rs. Ps. |
|---|---|---|---|
| | 1. CAPITAL: | | |
| | (i) Authorised Capital | | |
| | 1,00,000 'A' Class Shares of Rs. 5 each | 5,00,000 00 | |
| | 5,000 'B' Class Shares of Re. 1 each | 5,000 00 | |
| | | 5,05,000 00 | |
| | (ii) Subscribed Capital | | |
| | 56,468 'A' Class Shares of Rs. 5 each | 2,82,340 00 | |
| | 2,253 'B' Class Shares of Re. 1 each | 2,253 00 | |
| | | 2,84,593 00 | |
| | (iii) Amount called-up | Nil | |
| | Of (ii) above, held by | | |
| | (a) Individuals | 2,34,593 00 | |
| | (b) Co-operative Institutions | Nil | |
| | (c) State Government | 50,000 00 | |
| 2,75,224 00 | | | 2,84,593 00 |
| | 2. RESERVE FUND & OTHER RESERVES: | | |
| | (i) Statutory Reserve | 1,31,947 49 | |
| | (ii) Agricultural credit stabilisation fund | Nil | |
| | (iii) (a) Building fund invested in Building | 62,500 00 | |
| | (b) Building fund unutilised | 9,000 00 | |
| | (iv) Dividend Equalisation fund | 6,913 22 | |
| | (v) Special Bad Debts Reserve | Nil | |
| | (vi) Bad and Doubtful Debts Reserve | 4,705 00 | |
| | (vii) Investment Depreciation Reserve | 2,780 00 | |
| | (viii) Other Funds & Reserves; | | |
| | (a) Telephone Deposit | 1,900 00 | |
| | (b) Common Good Fund | 800 00 | |
| | (c) Building Recoupment Reserve | 12,362 28 | |
| 2,02,372 98 | | | 2,32,907 99 |
| Nil | 3. PRINCIPAL/SUBSIDIARY STATE PARTNERSHIP FUND ACCOUNT: | | |
| | 4. DEPOSITS & OTHER ACCOUNTS: | | |
| | (i) Fixed Deposits | | |
| | (a) Individuals | 14,99,803 76 | |
| | (b) Central Co-operative Banks | Nil | |
| | (c) Other Societies | Nil | |
| | (ii) Savings Bank Deposits | | |
| | (a) Individuals | 1,91,822 06 | |
| | (b) Central Co-operative Banks | Nil | |
| | (c) Other Societies | Nil | |
| | (iii) Current Deposits | | |
| | (a) Individuals | 56,528 35 | |
| | (b) Central Co-operative Banks | Nil | |
| | (c) Other Societies | Nil | |
| | (iv) Money at call and short notice | Nil | |
| 14,94,401 50 | | | 17,48,154 17 |
| Nil | 5. BORROWINGS: | | |
| | (i) From the Central Co-operative Bank: | | |
| | (a) Short-term loans, cash credits and overdrafts | | |
| | Of which secured against: | | |
| | (A) Government and other approved securities | Nil | |
| | (B) Other tangible securities —On Fixed Deposits | 26,000 00 | |
| | (ii) From the State Bank of India | Nil | |
| | (iii) From the State Government | Nil | 26,000 00 |
| 9,714 46 | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE AS PER CONTRA | | 8,033 66 |
| Nil | 7. BRANCH ADJUSTMENTS | | Nil |
| 11,422 77 | 8. OVERDUE INTEREST RESERVE | | 12,471 13 |
| 45,035, 41 | 9. INTEREST PAYABLE: | | 54,694 27 |
| | 10. OTHER LIABILITIES: | | |
| | (i) Bills payable | Nil | |
| | (ii) Unclaimed Dividends | 15,689 72 | |
| | (iii) Suspense (due by bank) | 4,794 98 | |
| | (iv) Sundries | 1,813 32 | |
| 17,464 12 | | | 22,298 02 |
| | 11. PROFIT AND LOSS: | | |
| | Profit as per last balance-sheet | 48,337 48 | |
| | LESS: Appropriations (—) | 48,337 48 | |
| | ADD: Profit for the year brought from the Profit and Loss Account | | |
| 48,337 48 | | | 29,598 57 |
| 21,03,972 72 | Total | | 24,18,750 81 |
| Nil | CONTINGENT LIABILITIES | | Nil |

| Year ending 30—6—1973 Rs. Ps. | PROPERTY AND ASSETS | Year ending 30—6—1974 Rs. Ps. | Rs. Ps. |
|---|---|---|---|
| | 1. CASH: | | |
| | In hand and with Reserve Bank, State Bank of India, | | |
| 1,08,353 16 | State Co-operative Bank, Central Co-operative Bank | | 83,813 84 |
| | 2. BALANCES WITH OTHER BANKS: | | |
| | (i) Current Deposits | Nil | |
| | (ii) Savings Deposits | 5,529 96 | |
| 4,38,356 17 | (iii) Fixed Deposits | 3,92,520 00 | |
| | | | 3,98,049 96 |
| Nil | 3. MONEY AT CALL AND SHORT NOTICE | | Nil |
| | 4. INVESTMENTS: | | |
| | (i) In Central and State Government securities | Nil | |
| | (ii) Other trustee securities | | |
| | R. F. in CLMB Debentures | | |
| | Market value Rs. 85,320/- | 88,100 00 | |
| | (iii) Shares in Co-operative institutions | | |
| | (a) In Central Co-operative Bank, Madras 16,400 00 | | |
| | (b) In Central Co-op. Printing Works Ltd., Madras 10 00 | | |
| | | 16,410 00 | |
| | (iv) Other investments: | | |
| 1,27,415 44 | R.F. in Central Co-operative Bank Ltd., Madras | 33,601 52 | |
| | | | 1,38,111 52 |
| Nil | 5. INVESTMENTS OUT OF THE PRINCIPAL/SUBSIDIARY STATE PARTNERSHIP FUND: | | |
| | 6. ADVANCES: | | |
| | (i) Short-term loans, Cash credits, overdrafts and bills discounted | 9,16,444 96 | |
| | Of which secured against: | | |
| | (a) Govt. and other approved securities Nil | | |
| | (b) Other tangible securities Rs. 8,07,401 00 | | |
| | Of the advances, amount due from Individuals Rs. 9,16,444 96 | | |
| | Of the advances, amount overdue Rs. 34,738 00 | | |
| | Considered Bad & Doubtful of recovery Nil | | |
| | (ii) Medium-term loans | 6,45,003 00 | |
| | Of which secured against: | | |
| | (a) Govt. and other approved securities Nil | | |
| | (b) Other tangible securities Rs. 6,38,712 00 | | |
| | Of the advances, amount due from individuals Rs. 6,45,003 00 | | |
| | Of the advances, amount overdue Rs. 1,10,060 00 | | |
| | Considered Bad & Doubtful of recovery Rs. 3,821 00 | | |
| | (iii) Long-term loans | 3,450 00 | |
| | Of which secured against: | | |
| | (a) Govt. and other approved securities Nil | | |
| | (b) Other tangible securities Rs. 3,450 00 | | |
| | Of the advances, amount due from individuals Rs. 3,450 00 | | |
| | Of the advances amount overdue Rs. 3 450 00 | | |
| 13,90,571 84 | Considered Bad & Doubtful of recovery Nil | | |
| | | | 15,64,897 96 |
| 17,215 63 | 7. INTEREST RECEIVABLE: | | |
| | Of which overdue Rs. 12,471 13 | | 20,757 09 |
| | Considered bad and doubtful of recovery Nil | | |
| 9,714 46 | 8. BILLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTION (as per contra) | | 8,033 66 |
| Nil | 9. BRANCH ADJUSTMENTS | | Nil |
| Nil | 10. PREMISES LESS DEPRECIATION | | 1,86,122 81 |
| | 11. FURNITURE AND FIXTURES | | |
| 7,239 35 | LESS DEPRECIATION | | 8,406 13 |
| | 12. OTHER ASSETS: | | |
| | (a) Suspense (Due to Bank) | 5,176 06 | |
| | (b) Telephone Deposit | 2,000 00 | |
| 5,106 67 | (c) Audit Revenue Deposit | 3,381 78 | |
| | | | 10,557 84 |
| | 13. NON-BANKING ASSETS ACQUIRED IN | | |
| Nil | SATISFACTION OF CLAIMS | | Nil |
| Nil | 14. PROFIT AND LOSS | | Nil |
| 21,03,972 72 | Total | | 24,18,750 81 |

FORM B

## PROFIT AND LOSS ACCOUNT FOR THE YEAR ENDED 30—6—1974

| For the year ending 30—6—1973 Rs. Ps. | EXPENDITURE | For the year ending 30—6—1974 Rs. Ps. |
|---|---|---|
| 90,648 27 | 1. Interest on deposits, Borrowings etc | 1,07,196 19 |
| 44,517 12 | 2. Salaries, allowances and Provident Fund | 50,558 52 |
| 1,697 00 | 3. Directors, and Local Committee Members fees and allowances | 1,802 00 |
| 4,361 87 | 4. Rent, Taxes, Insurance, Lighting etc. | 4,482 02 |
| 150 00 | 5. Law Charges | 300 00 |
| 1,145 35 | 6. Postage, Telegrams, and Telephone charges | 1.274 20 |
| 4,505 63 | 7. Auditor's Fees | 4,168 04 |
| 2,910 03 | 8. Depreciation on and repairs to properties | 3,025 05 |
| 4,589 26 | 9. Stationery, Printing, Advertisement etc. | 5,981 55 |
| Nil | 10. Loss from sale of or dealing with Non-Banking Assets | Nil |
| 2,219 44 | 11. Other Expenditure | 2,941 72 |
| 100 00 | (ii) Telephone Deposit Reserve | 100 00 |
| 11,422 77 | (iii) Reserve for Overdue Interest | 12,471 13 |
| — | (iv) Building Recoupment Reserve | 12,362 28 |
| 48,337 48 | 12. Balance of Profit | 29,598 57 |
| 2,16,604 22 | Total | 2,36,261 27 |

| For the year ending 30—6—1973 Rs Ps. | INCOME | For the year ending 30—6—1974 Rs. Ps. |
|---|---|---|
| 2.09,453 82 | 1. Interest and Discount | 2,28,301 67 |
| Nil | 2. Commission Exchange and Brokerage | Nil |
| Nil | 3. Subsidies and Donations | Nil |
| Nil | 4. Income from Non-Banking Assets and Profit from sale of or dealing with such assets | Nil |
| 4,373 74 | 5. a. Other receipts | 4,959 60 |
| 2,776 66 | b. Release of Reserve | 3,000 00 |
| Nil | 6. Loss if any, | Nil |
| 2,16,604 22 | Total | 2,36,261 27 |

M. KADIRVELU
Secretary

V. NARAYANASWAMY
Director

T. G. PODUVAL
Director

C. N. MOHAN RAJ
President

## AUDITOR'S REPORT

I, G. Gnanasekaran, the undersigned auditor of the Thyagarayanagar Co-operative Bank Ltd., duly authorised to audit the accounts of Thyagarayanagar Co-operative Bank Limited under Sec. 6-(1) of the Tamil Nadu Co-operative Societies Act of 1961 for the year ended 30—6—1974 report, that i) I have examined the foregoing Balance Sheet of the Thyagarayanagar Co-operative Bank Limited as on 30th June, 1974 and the Profit and Loss Account of the Bank for the year ended upon that date with the accounts relating thereto. ii) that in my opinion the Balance sheet is a full and fair one, containing all the necessary particulars and is properly drawn up so as to exhibit a true and correct view of the affairs of the Bank, according to the best of my information and the explanations given to me and as shown by the books of the Bank, iii) where I have called for any explanation or information such explanation or information have been given to me and have been found satisfactory. (iv the transactions of the Bank which have come to my notice have been within the competence of the Bank. (v) the profit and loss account shows a true balance of profit for the year covered by such account. (vi) In my opinion the Balance sheet and the Profit and loss account are drawn up in conformity with the Acts Rules and bylaws of the Bank. (vii) In my opinion, Books of Accounts have been kept by the Bank as required by the Acts the Rules and the Bylaws of the Bank.

Madras–17,
26—12—1974.

G. GNANASEKARAN,
Senior Inspector/Auditor.

# நேரு சிலை உடைப்பு: நன்னடத்தை ஜாமீனில் 2பேர்விடுதலை

சேலம், பிப். 28—நாமக்கல்லில் நேருவின் சிலையை உடைத்ததாக கே. ராமசாமி என்ற கல்லூரி மாணவர் மீதும், தாமோதரன் என்ற விவசாய இலாக்கா உதவியாளர் மீதும் வழக்கு ஒன்று தொடரப்பட்டது. இந்தச் சம்பவம் நடந்தது 1970-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 17-ம் தேதி.

இந்த வழக்கில் எதிரிகள் ஒரு வருட காலத்திற்கு நன்னடத்தை ஜாமீன் பேரில் விடுவிக்கப்பட்டனர்.

அவர்களிடமிருந்து தலா ரூ 500க்கு நன்னடத்தை ஜாமீன் பத்திரங்கள் எழுதி வாங்கிக் கொள்ளப்பட்டன.

மற்றொரு எதிரியான முத்துகிருஷ்ணன் விடுவிக்கப்பட்டார்.



காவிரி நீர்ப் பிரச்னையில்

# கட்சிக் கண்ணோட்டம்: மத்திய அரசு மீது சுதந்திர கட்சி புகார்

சென்னை, பிப். 28—காவிரி நீர்ப்பங்கீடு பிரச்னையில் மத்திய அரசு கட்சிக் கண்ணோட்டத்துடன் செயல்படுகிறது என்று தமிழ்நாடு சுதந்திரா கட்சி குற்றஞ் சாட்டியுள்ளது.

நேற்று நடைபெற்ற தமிழ்நாடு சுதந்திரக் கட்சியின் செயற்குழுக் கூட்டத்தில் இது குறித்து ஒரு கண்டனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தமிழக சர்வ கட்சித் தலைவர்களின் ஒரு மனதான யோசனையை ஏற்று, காவிரி நீர்ப் பிரச்னையை நடுவர் தீர்ப்புக்கு விடுமாறு செயற்குழுத் தீர்மானம் வலியுறுத்தியுள்ளது.

நாட்டிலுள்ள பெரிய நதிகள் தேசியச் சொத்துக்கள். ஒவ்வொரு நதி நீர்த்தேக்கத்திற்கும் சுயேச்சையான உயர் மட்டக் குழுக்கள் நிறுவப்படும் என்றும் அத்தீர்மானம் கோருகிறது.

## அ. தி. மு. க. ஒரு கட்சியா?

அண்ணா தி. மு. கழகத்துடன் சுதந்திரக்கட்சிக்கு எத்தகைய ஒட்டுறவுமில்லை என்பதை மற்றொரு தீர்மானம் எடுத்துக் காட்டியுள்ளது.

செயற்குழு முடிவில் நிருபர்களிடம் கட்சித் தலைவர் சா. கணேசன் பேசுகையில், அ. தி. மு. க. வை ஒரு அரசியல் கட்சியாகவே தமது கட்சி மதிக்கவில்லை என்று கூறினார் ஜெயப்பிரகாஷ்.

ஜெயப்பிரகாஷ் இயக்கத்தை சுதந்திரக்கட்சி உறுதியுடன் ஆதரித்து வருவதாகவும், எதிர்காலத்தில் தேர்தல் உறவு என்ற நிலை ஏற்படுமானால், நிச்சயமாக காங்கிரசல்லாத, கம்யூனிஸ்டு அல்லாத ஜனநாயகக் கட்சிகளுடன் தான் தமது கட்சி உறவு வைத்துக்கொள்ளும் என்றும் அவர் விளக்கினார்.

பொதுத் தேர்தலை அதற்குரிய காலத்தில் நடத்திவிட வேண்டுமென்றும் குறித்த காலத்திற்கு முன்னதாகவோ காலம் தாழ்த்தியோ தேர்தலை நடத்தக்கூடாது என்று மத்திய அரசை அவர் கேட்டுக்கொண்டார்.

ஜெயப்பிரகாசர் தலைமையில் நாடாளுமன்றத்தின் முன் நடத்தவிருக்கும் ஆர்ப்பாட்டத்திற்கு தமிழகசுதந்திரக் கட்சி சார்பாக தொண்டர்கள் டெல்லிக்கு அனுப்பப்படுவார்கள் என்றும் சா. கணேசன் கூறினார்.

வறட்சிப் பகுதிகளில் தமிழக அரசு மேற்கொண்டுள்ள நிவாரணப் பணிகளுக்குப் பாராட்டு தெரிவித்த அவர், அந்தப் பகுதிகளில் குடிநீர் போன்ற அடிப்படைத் தேவைகளுக்கு நிரந்தரத் தீர்வு காணப்படவேண்டும் என்றும் சா. கணேசன் கேட்டுக் கொண்டார்.

சரக்கு ரெயில்வே கட்டணம் உயர்த்தப்பட்டதை கண்டித்தும், மின்சாரம் உபயோகிப்போர்களுக்கு டிபாசிட் பணம் உயர்த்தப்பட்டதை ரத்து செய்யக் கோரியும் கூட்டத்தில் தீர்மானங்கள் நிறைவேறின.

கட்சிவிட்டுகட்சி மாறும் அரசியல்வாதிகள் மக்கள் கட்சி ஊக்குவிப்பதை கண்டித்தும், காவிரி நீர் பிரச்சினையில் ஒற்றுமையுடன்செயலாற்றும் எல்லா தமிழக சட்டசபை உறுப்பினர்களை பாராட்டியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டதாக சா. கணேசன் மேலும் கூறினார்.

# மைசூர் அரண்மனை மியூசியம் ஆகிறது

பெங்களூர், பிப். 28—மைசூர் முன்னாள் மன்னரின் அரண்மனை ஒரு மியூசியமாக மாற்றி அமைக்கப்படும் என்று கர்நாடக முதல்வர் அர்ஸ் மேல் சபையில் தெரிவித்தார்.

மைசூர் அரண்மனை பராமரிப்பிற்காக 0 பேர் கொண்ட அறக்கட்டளை நிறுவப்பட்டிருப்பதாக அவர் தெரிவித்தார்.

(6-ம் பக்கம் தொடர்ச்சி)

டும் ஆயுத உதவி அளிக்க அமெரிக்கா முடிவுசெய்துள்ளதால் இந்தியா அச்சமடைந்துவிடவில்லை'' என்று வெளி விவகார மந்திரி சவான் கூறியுள்ளார்.

அமெரிக்க முடிவு பற்றி நேற்று டெல்லியில் நடந்த தேசியக் கருத்தரங்கு ஒன்றில் பேசுகையில் அவர் இவ்வாறு சொன்னார்.

''புதிய நிலைமையைச் சமாளிக்க இந்தியாவுக்கு திறமை இருக்கிறது'' என்றார் அவர்.

''சில நாடுகள்' தோற்றுவித்துள்ள ஆயுதப் போட்டி குறித்து இந்தியாவும் ரஷியாவும் சேர்ந்து விடுத்துள்ள கூட்டறிக்கையில் ஆழ்ந்த கவலை தெரிவித்துள்ளன.

பாகிஸ்தானுக்கு அமெரிக்கா மீண்டும் ஆயுத உதவி அளிப்பதை கூட்டறிக்கை இவ்விவிதம் மறைமுகமாகக்குறிப்பிட்டது.

இந்தியா வந்திருந்த ரஷிய ராணுவ மந்திரி கிரெச்கோவின் விஜய முடிவில் இக் கூட்டறிக்கை வெளியிடப்பட்டது.




Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Honorary Editor: N. Muthukumarasami.


தமிழக அரசு லாட்டரி குலுக்கல்

# கன்னியா குமரிக்கு ரூ. 1 லட்சம் முதல் பரிசு

சென்னை, பிப். 28—நேற்று நடைபெற்ற தமிழக அரசு லாட்டரி குலுக்கலில் கன்னியாகுமரி மாவட்டம் விளங்காடுக்கு ரூ 1 லட்சம் முதல் பரிசு கிடைத்தது.

சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்ற தமிழக அரசு லாட்டரியின் 73-வது குலுக்கல் நேற்று நடைபெற்றது. வெளியிடப்பட்டிருந்த எம். சி., எம். டி. என்ற 2 வரிசை சீட்டுகளின் குலுக்கலில் 2 பேர்களுக்கு தலா ரூ. 1 லட்சம் வீதம் முதல் பரிசு வழங்கப்படும்.

## முதல் பரிசு

எம்.சி. வரிசையில் 668911 என்ற எண்ணுள்ள சீட்டுக்கு ரூ 1 லட்சம் விழுந்தது. குமரி மாவட்டம் விளங்கோடு நகரில் இந்தச் சீட்டு விற்பனையாகியுள்ளது.

எம். டி. வரிசையில் ரூ 1 லட்சம் விழுந்த முதல் பரிசு சீட்டு எண் 475301. இது நீலகிரி மாவட்டம் குன்னூரில் விற்பனையாகியுள்ளது.

## 2-வது பரிசு

கீழ்கண்ட பரிசு சீட்டுகளுக்கு 2-வது பரிசு ரூ. 10 ஆயிரம் கிடைத்திருக்கிறது.

எம்.சி 068469 தாராபுரம் (கோவை)

எம்.சி. 002259 (உத்தமபாளையம் மதுரை)

எம்.டி 369024 சென்னை

எம்.டி. 189712 சித்தூர் (ஆந்திரா)

ரூ. 500 பரிசு பெற்ற சீட்டுகள் வருமாறு:—

எம்.சி. 068468
எம்.சி. 068470
எம்.சி. 002258
எம்.சி. 002260
எம்.டி. 369023
எம்.டி. 369025
எம்.டி. 189711
எம்.டி. 189713

ஆறுதல் பரிசு ஆயிரம் ரூபாய் பரிசு பெற்ற சீட்டுகள்

எம்.சி. 668910, 668912
எம்.டி. 475300, 475302

# பாகிஸ்தானுக்கு போர் விமானங்கள்: ஈரான் அளிக்கிறது

இஸ்லாமாபாத், பிப். 28—பாகிஸ்தானுக்கு அமெரிக்கா மீண்டும் ஆயுதஉதவி அளிப்பது போதாதென்று ஈரானும் இப்போது பாகிஸ்தானுக்கு நவீன போர் விமானங்களையும், மற்றும் நவீன ஆயுதங்களையும் அளிக்கிறது.

பாகிஸ்தானுக்கு வந்த ஈரான் மன்னர் ஷாவுடன் பிரதமர் பூட்டோ இதுபற்றிப் பேச்சு நடத்தியுள்ளார்.

ஈரான் மன்னர் தமது 3 நாள் விஜயத்தை முடித்துக் கொண்டு நேற்றுதான் தாயகத்துக்குப் புறப்பட்டார்.

அவருடன் பூட்டோ 7 மணி நேரம் பேச்சு நடத்தினர்.

ஈரானிடமிருந்து ராணுவ உதவி பெறுவது பற்றி ஈரான் மன்னருடன் பூட்டோ விவாதித்தார்.

அமெரிக்காவிடமிருந்து ஈரான் முன்னர் ஏராளமான ஆயுதங்களை விலைக்கு வாங்கியது.

ஈரான் இப்போது மேலும் பல கோடி ரூபாய்க்கு அமெரிக்காவிடமிருந்து மிக நவீன ஆயுதங்களை வாங்கிவருகிறது எனவே ஏற்கனவே தன்னிடம் உள்ள ஆயுதங்களைப் பாகிஸ்தானுக்கு அளிக்க ஈரான் இப்போது முன்வந்துள்ளது.

பாகிஸ்தானுக்கு ஆயுதம் விற்கக்கூடாது என்று இதுவரை அமெரிக்கா தடைவிதித்திருந்ததால், ஈரான் தன்னிடமுள்ள அமெரிக்க ஆயுதங்களை பாகிஸ்தானுக்கு அளிக்கமுடியாமல் இருந்தது.

இப்போது அமெரிக்கா அத்தடையை அகற்றிவிட்டதைத் தொடர்ந்து ஈரான் தனனிடமுள்ள எப்-10 போர் விமானங்கள் உட்பட பல நவீனஆயுதங்களை பாகிஸ்தானுக்கு அளிக்கிறது.

## பாகிஸ்தானுக்கு சப்மரீன்கள

புதுடெல்லி, பிப் 28—சீனா, பிரான்ஸ் ஆகியவற்றிடமிருந்தும் மற்றும் பல அரபு நாடுகளிடமிருந்தும் பாகிஸ்தான் ஏராளமான ஆயுதங்களைப் பெற்றுள்ளதாக மக்கள் சபையில் நேற்று ராணுவ மந்திரி சுவரண்சிங் தெரிவித்தார்.

பாகிஸ்தான் இந்நாடுகளிடமிருந்து ராணுவ டாங்கிகள் விமான எதிர்ப்பு பீரங்கிகள், பீரங்கிகள், பீரங்கிப் படகுகள், டார்ப்பிடோ படகுகள் சப்மரீன்கள் (நீர்மூழ்கிக் கப்பல்கள்) ஹெலிகாப்டர், விமானங்கள், பலரக போர் விமானங்கள் ஆகியவற்றைப் பெற்றுள்ளது என்று சுவரண்சிங் கூறினார்.

## அச்சமில்லை

''பாகிஸ்தானுக்கு மீண்

(2-ம் பக்கம் பார்க்க)

தென் இந்தியாவுக்கு

# தனி சினிமா உதவி நிறுவனம் இல்லை

சென்னை பிப் 28—தென்னகத்திற்கு தனியாக திரைப்பட நிதி உதவிகார்ப்பரேஷன் அமைக்கும் தமிழக அரசின் யோசனையை மத்திய அரசு ஏற்கவில்லை என்று அரிஜன நலத்துறை மந்திரிராஜாங்கம் தெரிவித்தார்.

தமிழ்நாட்டின் திரைப்படத் தொழில் வளர்ச்சிக்காக, குடிசை மாற்று வாரியம் போன்று பிலிம்போர்டு ஒன்று அமைக்கப்படுமா என்று கோவை செழியன் கேட்டதற்கு, இது குறித்து விவரமாக எழுதி அனுப்பினால் முதல்வருடன் கலந்து பரிசீலிக்கலாம் என்றும் மந்திரி கூறினர்.



# டெல்லி பேரணிக்கு 10 லட்சம் பேர்: ஜெயப்பிரகாஷ் பேட்டி

புதுடெல்லி, பிப், 28—வருகிற 6ந் தேதியன்று டெல்லியில் பார்லிமெண்ட் முன்பாக நடக்கஇருக்கும் பேரணியில்நாட்டின்பலபகுதிகளிலிருந்தும் 10 லட்சம் பேர் பங்கு கொள்வார்கள் என்று ஜெயப்பிரகாஷ் தெரிவித்துள்ளார்.

பார்லிமெண்டை நோக்கி இவர்கள் அணிவகுத்துச் சென்று பார்லிமெண்டிடம் ஒரு மகஜரை அளிப்பர்.

இந்த அணிவகுப்பில் பழைய காங்கிரஸ், ஜனசங்கம், பாரதிய லோக்தளம், (இந்திய மக்கள் கட்சி) அகாலிதளம், புரட்சி சோஷலிஸ்ட், ஆரிய சபா ஆகிய கட்சிகள் கலந்து கொள்கின்றன என்று ஜெயப்பிரகாஷ் கூறினர்.

இடது கம்யூனிஸ்ட் கட்சி இதில் கலந்துகொள்ளாது என்றும் அவர் கூறினர்.

உத்தரப்பிரதேசத்தில் இருந்து 3 லட்சம் பேர், ஹரியானவில் இருந்து 3 லட்சம் பேர், ராஜஸ்தானிலிருந்து ஒரு லட்சம் பேர், மத்தியப் பிரதேசத்திலிருந்து 50 ஆயிரம் பேர், பீகாரில் இருந்து 30 ஆயிரம் பேர், குஜராத்திலிருந்து20 ஆயிரம்பேர் அணிவகுப்பில் கலந்துகொள்கிறார்கள். தென் மாநிலங்களில் இருந்தும் நிறைய பேர் கலந்துகொள்கிறார்கள் என்று ஜெயப்பிரகாஷ் ஜெயப்பிரகாஷ் தெரிவித்தார்.

## பேரணிக்கு ஆதரவு

மார்ச், 6ந்தேதி நடக்க இருக்கும் பேரணிக்கு கிடைத்து வரும் ஆதரவு பெரிதும் உற்சாக மூட்டுவதாக உள்ளது என்று ஜனசங்க பொதுச் செயலாளர் எஸ். எஸ். பண்டாரி கூறினர்.

இப்பேரணியில் கலந்து கொள்ள வருகிறவர்களுக்கு மத்திய அரசு தடங்கல்களை ஏற்படுத்தாது என்று நம்புவதாக அவர் கூறினர்.

ஜனசங்க கட்சியின் அகில இந்திய மாநாடு மார்ச் 3-ந் தேதி முதல் 5-ந் தேதி வரை நடைபெறும் என்று பண்டாரி கூறினர்.

# தொழில் நுணுக்க கல்லூரிகள்

சென்னை, பிப். 28—தொழில் நுணுக்கக் கல்லூரிகளை ஒருங்கிணைக்க போர்டு ஒன்று அமைக்கப்பட்டிருப்பதாக கல்வி மந்திரி நெடுஞ்செழியன் இன்று சட்டசபையில் தெரிவித்தார்.

# மக்கள் தொகைப் பெருக்கத்தை சமாளிக்க மாதம் ஒரு நகரம்

புதுடெல்லி, பிப். 28—இந்தியாவில் உள்ள மக்கள் தொகை பெருக்கத்தைச் சமாளிக்க வேண்டுமானால் மாதம் ஒரு நகரம் அமைக்க வேண்டும். இவ்விதம் 25 ஆண்டுகளுக்கு நகரம் ஒன்றுக்கு 10 லட்சம் பேர் கொண்டதாக மாதந்தோறும் உருவாக்கவேண்டும். இவ்வாறு ஐ நா. மனிதக் குடியிருப்புகள் மாநாட்டுப் பொதுச்செயலாளர் என்ரிக் பிஞலோஸா கூறியுள்ளார்.

நகர மக்கள் குடியிருப்புகள் வளர்ச்சிக்கான செயல் திட்டத்தை வகுக்க உலக நிபுணர்கள் மாநாடு மே மாதம் 31ம் தேதி முதல் ஜூன் 11ம் தேதி வரை கனடாவில் வான்கூவரில் கூடுகிறது ஆசியமண்டல பூர்வாங்க மாநாடு ஈரானில் டெஹ்ரான் நகரில் ஜூன் 14ம் முதல் 19ம் தேதி வரை கூடும். இந்தியா இக்குழுவிற்குத் தலைமைவகிக்கும்.